அ1/1



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சீகாழி - திருஞானசம்பந்த சுவாமிகள்

திருவருள்பெற்ற

**கண்ணுடையவள்ளல்**

திருவாய்மலர்ந்தருளிய

# ஒழிவிலொடுக்க மூலம்.

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங்

கோயிலூர்

**அ. இராமசாமிச்சுவாமியவர்களால்,**

பலருடையவேண்டுகோளின்படி

பிழையறப்பரிசோதித்து

சென்னை:

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சர்வதாரிஹு ஐப்பசிமீ.

1888.

இதன்விலை அணா - ௩.



# சூசிபத்திரம்

| நெம்பர் | உட்பிரிவு. | | பக்கம். | பாடற்றொகை |
|---|---|---|---|---|
| ௧ | பொதுவினுபதேசம் | ... | ௧ | ௬௩ |
| ௨ | சத்திநிபாதத்துத்தமமொழிவு | ... | ௧௨ | ௨௮ |
| ௩ | யோகக்கழற்றி | ... | ௧௭ | ௩0 |
| ௪ | கிரியைக்கழற்றி | ... | ௨௨ | ௧௬ |
| ௫ | சரிதைக்கழற்றி | ... | ௨௫ | ௧௪ |
| ௬ | விரத்திவிளக்கம் | ... | ௨௭ | ௧௩ |
| ௭ | துறவு | ... | ௩0 | ௨௫ |
| ௮ | அருளவத்தைத்தன்மை | ... | ௩௪ | ௪௨ |
| ௯ | வாதனைமாண்டார்தன்மை | ... | ௪௧ | ௯ |
| ௧௰ | நிலையியல்பு. | ... | ௪௨ | ௧௩ |

உட்பிரிவின் பெயர்முறையுஞ் செய்யுட்டொகையும் அடங்கியபாடல்.

சீராகுமாகமத்திற்செப்புமியற்சித்தாந்த
நீராகுமுப்பொருளினேர்தெளிவினேர்த்துய்த்தற்
கொத்தபொதுவினுபதேசமேழொன்பான்
சத்திநிபாதத்துத்தமமொழிவுநாலேழ்
அருமையோகக்கழற்றியாய்ந்திடுமையாறுங்
கிரியைக்கழற்றிகிளத்துமீரெட்டாஞ்
சரிதைக்கழற்றியதிற்சாற்றுமீரேழாம்
விரத்திவிளக்கத்தின்மேவும்பதின்மூன்
றுறுப்பறுநற்றுறவினுற்றவையைந்தாகு
மவத்தைத்தன்மைக்குளரியவாறேழாம்
வாதனைமாண்டார்தன்மைவாய்த்தமும்மூன்றுரும்
கோதிநிலையியல்பிற்கூறல்பதின்மூன்று
மொருபத்ததிகாரத்தோங்குதிருவெண்பா
விருநூற்றைம்பான்மூன்றிவைகளிசையத்
தழுவியுரைத்திட்டான்றகைமையுறுவள்ள
லொழிவிலொடுக்கத்தினுள்.

## காப்பு.

நிம்பநிமுற்பா, லும்பன்முகத்தார்
செம்பதுமத்தா, ணம்புகருத்தே.

ஒழிவிலொடுக்கத்துறைவரநாயேற்குச்
செழிவிலொடுங்கருணைசேர்க்கு - முழுதின்பப்
பண்டைவளநாட்டும்பரமகுருப்போரூரன்
றண்டைவளநாட்டுதிருந்தாள்.

வள்ளலுரைத்தவழுவிலொழிவில்லொடுக்கந்
தெள்ளுமுறையெலாந்தெரிவிக்கு - முள்ளமே
யெம்பந்தநீக்குமிறைவன்றமிழ்க்காழிச்
சம்பந்தன்பூஞ்சதங்கைத்தாள்.

ஆனைமுகனாறுமுகனம்பிகைபொன்னம்பலவன்
ஞானகுருவாலிரியையுண்ணாடு.

---

பாயிரம்.

சமரபுரியாறுமுகன்றானேயென்னுள்ளத்
தமரவிருந்திந்நாற்கருத்தந் - திமிரமறக்
காட்டினான்பொல்லாக்கடையேனைச்சீர்வீட்டி
னூட்டினான்பேரருளினால். (௧)

கையிலுறைபாலின்பங்காட்டுவிரலேகசிவ
மெய்யருளாம்பாதமிடுமென்பதுகை - துய்ய
விருட்கேவலசகலமெந்தைசம்பந்தன்
றிருக்கோலங்கொண்டசிறப்பு. (௨)

அரவுவிடன்தீர்க்குமமணருடன்மாய்க்குந்
திரகநியிலென்னிலவைசேர்க்கும் - புரமயிலை
யென்பைப்பெண்ணாக்கிவிடுமேழையேனேழ்பிறவித்
துன்பந்தநீக்குவான்சொல். (௩)

---

91/1

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்க மூலம்.

## முதலாவது.

வேதாகமப்

## பொதுவிலுபதேசம்.

வேதாகமப்பவுரிவிசுங்களாசநிலை
யாதாரவெற்பிலபிடேகம் - போதத்
திருளிலெழுபானுவெனதொழிவிலின்பக்
கருணைபொழிவானெடுத்தகை. (க)

தன்னிழப்பையென்னகற்றுச்சாதிப்பான்சற்குருவா
மன்னுபெருஞ்சீயமதயானை - தன்னடைமேற்
சொப்பனத்தேதோன்றித்துடிப்பற்றுக்கேவலமாய்
நிற்பதுபோற்பாரானெனின். (உ)

கூலித்தொழிலாளர்கொண்டுவிற்போர்போன்றகுரு
வேலைப்பகடிகளைமேவாதே - காலம்போற்
பார்த்திருக்கவைத்தபரமகுருவைப்பரவ
வார்த்தையிலைதீண்டாமனம். (ங)

குட்டித்திரட்காடியாறெழுகக்கோன்குதிந்துக்
கட்டிப்புதைந்தகதையாகுந் - துட்டமலப்
பித்திலேழுந்தவர்கள்பேய்பிதற்றும்பேதையர்க்குப்
புத்திபோற்காட்டும்பொருள். (௪)

குருட்டரிப்பனுர்க்குங்குபேரனென்றுபேரோ
கருப்பிரதமோர்த்தையோகாட்டு - மருட்டரித்த
வாசாலைப்போல்வரோவாறுறுக்கப்புறத்தே
பேசாதிருத்தவல்லாப்பேர். (௫)

தன்னறிவுசாட்சியல்லாற்சாயுச்சியப்பயனைச்
சொன்னபிழைகெட்டேன்றெலைப்பரோ - முன்னே
நடவாவழியொருவன்சொல்லநடந்து
தடுமாறிநொந்தறியாதார். (௬)

பொய்போகப்போகப்பொருந்திப்பொருடானுஞ்
சைவோகபோகதாங்கத்தி - லையும்
பரிபாகங்கண்டுபதையாமற்பார்க்குங்
குருவேகாண்ஞானக்குரு. (௭)

தேனுண்டுமிழுந்திறம்போற்சிவானந்த
மோனந்துளும்பிமொழிகாலத் - தேநின்று
தோன்றிருதுபோலுமொன்றைச்சுட்டாதுகேட்பவர்கட்
கான்றதவம்வேதமது. (௮)

இருளிற்சுடரென்னவிந்திரவியென்ன
வருளைக்கடந்தபரானந்தர் - திருவாக்
கமுதமழைபம்பாச்சொன்னன்னிமித்தமாங்கே
மமதையிராதென்றேமதி. (௯)

சாயாபுருடனைப்போலானந்தமேநடித்த
மாயாவயிரிமனமாண்ட - நேயவுரை
யாவேசர்வீரசர்மடலாளர்
சாவானந்தர்க்குச்சரி. (௧0)

சத்தியநிர்வாணத்தாற்றற்போதத்தாக்கறுத்து
வைத்துவழிகாட்டுமறைப்புலவன் - சுத்தன்
றமிழ்க்குரிசிற்சீகாழிச்சம்பந்தனென்பா
னெமக்கருளிச்செய்ததிது. (௧௧)

தாக்கற்றபூரணத்திற்சந்தற்றதம்மைமல
நீக்குந்துயாகலநேசித்தோர் - பார்க்கும்
வழிபலநாம்பைமறித்தவாறுநீமாளா
வொழிவிலொடுக்கமுரைப்போம். (௧௨)

சுருதிகுருவாக்குச்சுவாநுபவமூன்றுஞ்
சரியொத்தபோதமுனைச்சார்வைத் - தெரிய
வுரைத்தநூற்பேர்கேளொழிவிலொடுக்கம்
விரித்தநூற்கெல்லாம்விதை. (௧௩)

தந்திரகலைமந்திரகலைசார்பழுந்தச்சாற்றுமது
மந்திரசரிதாதிமார்க்கமிது - முந்தைத்
தபதிவிரத்தியரைச்சார்பழியச்சாற்று
முபதேசமென்றேயுணர். (௧௪)

உடற்குயிர்போற்கட்கிமைபோலூசிநூலொத்து
விடிற்புலிதீபாம்பினில்வீழ்வார்க்காஞ் - சுடச்சுடினும்
வாழைக்காகாவேதிமட்கலத்துக்காகாவா
ரேழைக்காகாததிது. (௧௫)

ஆலிங்கனத்திலேயைந்திணையும்பாடுவோன்
மாலின்பவாரிமறிதிரைபோற் - காலப்பூக்
கிண்கிணிவாய்ச்செய்ததுபோற்கின்னரிப்பாட்டுல்லாசங்
கொண்டவர்போற்கண்டவர்க்காகும். (கசு)

வணங்காவுரைக்குவணக்கமிலைநீங்கை
வணங்கிவாழ்த்தென்னில்வளமியா - வணங்கினு
மெல்லார்க்குநன்றாயிருப்பதிலையாதொன்று
மெல்லார்க்கும்பொல்லாதிலை. (கஎ)

அறைந்தபறைகுழற்குமாடினர்க்குமேற்க
மறந்தழுவார்வாய்ப்பாட்டுவாசா - திறங்கேளீர்
கூடக்கரைவதலாற்கூறிற்பயனில்லாப்
பாடற்கார்பார்ப்பார்பயன். (கஅ)

போதவொழிவையுரைபோய்த்தீண்டாபூதலத்தோர்
பாதமனங்கள்போலப்பற்றுமோ - நீடொளியிற்
கண்ணாடியிற்கடலைக்கைவசமாய்க்காட்டுதல்போற்
கண்ணாரிசன்னையைப்போற்காண். (கசு)

ஆனைக்கைபோலபினவத்துவிதானந்தமா
மோனத்தைவாக்குமனமுட்டுமோ - ஞானத்தாற்
காக்கையிருந்தமனைகைமேற்பிறையென்ற
லாற்கருதினீசிவமாவை. (உ0)

முலையுண்ணிநீருண்ணுமோட்டெருமைமூடர்
சலமின்றிச்சந்துசைப்பார்தர்க்கர் - பலதாரை
வட்டிலேபோலுமவர்மாயோவாசகத்தைக்
கிட்டினாகக்கிடீர். (உக)

குன்றழலினொந்துநீர்தேடுங்குருடனைப்போற்
கன்றுபசுவைப்பார்க்குங்காலம்போ - லொன்றொன்றில்
வேட்டவதிமோகிவிடயம்போற்சற்குருவைத்
கேட்டமதிபக்குவமாய்ந்தேர். (௨௨)

பெண்ணுணவியாய்ப்பிறந்துவளர்ந்தேயழியு
மெண்ணுஐவேதமியல்பின்றிப் - பண்ணுங்காற்
காரணகத்தாவொருவனுண்டவனைக்காட்டுநூ
லாரணமுமாகமமுமாம். (௨௩)

தன்னையறியாதுவேறுண்டாய்த்தானறியா
துன்னிலொழிவாமுதிப்பீதொன்றுமிலைச் - சந்நிதிக்கே
யஞ்சுதொழிலாமதனையானந்தவாக்காலே
கிஞ்சளவுகேட்கலுமாகும். (௨௪)

உதியாதுளதாகியோங்கிப்பேராம
லதிருக்குமங்குறைந்தாகாமற் - பதையாத
வாகாயமுங்காலும்போலவசைவற்ற
தேகாண்பரிபூரணம். (௨௫)

எட்டுருவுமைந்தொழிலுமிச்சைவடிவும்பயனுஞ்
சுட்டரியபூரணமுஞ்சுட்டுதலு - நிஷ்டைகளு
முன்னிழப்பிலின்பமுதித்தொடுங்குமொன்றிரண்டுந்
தன்னருட்கேயாமத்தனை. (௨௬)

உனையுணர்த்திற்பாசமுதவியுடையோன்
றனையுணர்த்தினீயேதலமாங் - கனலை
விறகிடமாய்க்காணிலதன்வெம்மையைவேறுக்கி
யறியகிலாப்போலதுநீயாம். (௨௭)

விடாதவத்தைமுடிவிடம்புசித்தாற்போலச்
செடாதிகளுஞ்சேதனனுஞ்சேர்ந்து - படாதுபடு
மச்சைக்கழற்றிலருள்வழிநீயவ்வழியுன்
னிச்சைப்பொருண்மலமென்றெண். (உ௯)

தன்னையறிவார்க்கெதிருந்தாலும்பயனுமில்லை
யென்னிற்சிவனையறிவென்போமோ - சின்னாத
தீதகற்றுமாற்றெளிபோற்றேய்ந்துசிவமாயிருக்கப்
போதகத்தைநாமொழிவிப்போம். (உ௲)

பூரணவானந்தமோந்தானேபுறம்புபால்
வாரியின்மீன்போன்றமலவாழ்வைப் - பாரீ
ருதியாதுநின்றவொளியையிருளாக்கு
மதுகாணுமக்கினித்தம்பம். (௩0)

கடல்சிவநீரான்மாவுப்புமலங்கன்
மடர்வாயுப்போதமலைகா - ணிடைவிடா
தவ்வாதியுட்காரணமைம்பொறியிற்பம்பரம்போ
லிவ்வாறுணைச்சுழற்றுமெண். (௩க)

மண்ணாதிசத்தாதிவாக்குமனமாதி
கண்ணாதிநாதாந்தங்கண்டகன்ற - வுண்மை
தனையனுவென்றேயுணர்த்துஞ்சார்பினையுங்கண்ட
வுனையறிவென்றுள்ளேயுணர். (௩உ)

அஞ்சுதொழிலாவதுவேயஞ்சவத்தைக்கிஞ்சலிலா
வஞ்சிடத்துங்கொள்ளிவட்டமாகவே - பஞ்சவன்னம்
வைத்தபடிகம்போன்மாறுதுனைமயக்கல்
சித்திரக்கூத்தாகத்தெளி. (௩௩)

மாயாவிகாரமதுபானம்போன்றுமயக்
கோயாததுன்னாலொழியுமோ - நீயதுவாய்ப்
போகாமலாடும்பவுரியவன்பொய்க்காட்சி
யாகாதுபோலேயறி. (௩௪)

பழுதையைப்பாம்பென்றபயம்போனாற்பாவித்
தழுதுடம்பையாட்டுகினுமாமோ - தொழிலொழிவி
னின்றசிவயோகிநினைத்தொருகானீவாரா
யென்றழைத்தாலும்பதையாதென். (௩௫)

கன்னிக்கதலிதனைநார்கழிப்பான்கண்போலத்
தன்னையறியாவறிவேதான்மீளச் - சொன்னாலும்
நாவென்றநாவேபோனானென்றசொல்லளவே
யாமன்றித்தானெதிராகா. (௩௬)

தம்மாலறிந்ததெல்லாந்தாமல்லவென்றுரைத்தாற்
*சும்மாதிருப்பதுவாய்த்தோன்றுதோ - விம்மி
யரிந்ததலைவாயடங்குமவ்வளவேயல்லாற்
றெரிந்திடுமோநீயேதெளி. (௩௭)

மறவாததம்மையறிவார்மருளோ
வறிவோவிடயம்போலாகி - லறிவை
யறிவதறிவாகையினாலாறுமுந்தத்த
மறிவையறியாபோலறி. (௩௮)

ஊன்றினிலமசையினுதமொழிந்தசிவந்
தோன்றாத்துணையுனக்குத்தோன்றுமோ - தோன்றில்
விரானுதிரைத்தீண்டுவபோல்வாய்முகத்தைமென்று
சிரிப்பதுபோற்பார்த்துத்தெளி. (௩௯)

---

*சும்மாவிருப்பதுவாய் என்றும்பாடம்.

பற்றியதுதானும்படிகநிபற்றுவிடப்
பற்றையெரிட்டுப்பார்த்தாலென் - சற்றும்
பிரியாச்சிவனைப்பிரித்தறியந்தேடு
மறியாமைகாணவம். (௪0)

அருளாலேதம்மையறிந்தருளாயந்தப்
*பரிபூரணமேபரையாய்ப் - பரையொழிவி
லானந்தாதிநமாமத்துவிதசித்தாந்த
மோனம்வேதாந்தமுடிவு. (௪௧)

நன்மையுமுன்னிலையுந்தானுய்ப்படர்க்கையுமா
யென்றொழிவிலின்புமாயின்புமிது - வென்றாத
வேதாந்தசித்தாந்தமேபிறவாவீடென்று
ரோதாமல்வேதமுணர்ந்தோன். (௪௨)

மலையேறிப்போவார்க்குமாநிலமாய்த்தோன்றிக்
கலையாதிமைக்கழற்றிக்காட்டித் - தொலைவிலே
காட்சியொழித்தென்னைக்காந்தகலாவாதனையின்
மாட்சிசொலின்மோனமாம்வந்து. (௪௩)

இதுவென்றதெல்லாம்பொய்யென்றுனெனக்குப்
பொதுவன்றித்தங்குமிடம்போச்சு - வதுநாங்கா
ளொன்றுனதன்பேரிரவைப்பகலாக்கு
மொன்றேபரமசுகமோ. (௪௪)

அறிவித்தாலன்றியறியாய்நீயென்றான்
மறவைக்கதுவேமருந்தா - யறியவெளி
லாகாயமெய்யவைத்துவம்பாமறிவெளிலு
மாகாயவாக்காமது. (௪௫)

---

*பரிபூரணப்பரையேயாய்ப் - என்றும்பாடம்.

மலமாயைகன்மமயக்கவிகற்ப
நிலைபோகப்போயொழிந்தநிஷ்டை - பலவோ
வறிவுக்கெதிரில்லையாகாயநீழ
லற நிற்குமாபோனிற்பாய். (௪௬)

போதம்பதைப்பறவேபூரணமாம்பூரணமும்
போதம்பதைத்தளவேபொய்யாகு - மீது
*விழித்திமைப்பர்நின்றால்வெளியசைந்தாற்காற்றும்
பழக்கமதைச்சாட்சியைப்போற்பார். (௪௭)

வேதாந்தம்போலிருக்கும்வேதாந்தசித்தாந்த
நாதாந்தபோதநழுவினர்க்கு - நேதி
தனைக்கழன்றுதற்போதஞ்சார்பழியுஞ்சந்தி
னுனக்கறிவானந்தமுதிக்கும். (௪௮)

தத்துவாதீதத்திமிர்ப்படங்கித்தற்செலவு
மத்தின்வரத்துமசையாத - சுத்தத்தை
யொன்றென்றுனீசற்றுளதாவையாதலினா
லன்றென்றதென்றேயறி. (௪௯)

வெற்றவெறுமானந்தமேலீடேகேவலத்தி
னிற்பதுபோலந்தநிலைகழன்றோர் - சிற்போத
வண்டங்கடந்தவமுதத்தினோடுலவும்
வெண்டிங்களுங்கிரணமும். (௫0)

நினைப்புமறப்பறுத்துநீயறலைநீக்கா
துனைக்கரையநில்லங்ஙனங்ங - னெனக் ‡கதற்றல்
விப்பிரட்டமந்திரட்டம்வேலையிலேபோட்டசுரை
செப்படித்தன்ஞானச்சிறை. (௫௧)

---

*விழித்திமைப்பாநின்றால் என்றும்பாடம்.
‡கதறல்=கதற்றலெனவிகாரமாயிற்று.

சந்தாநிநத்துவம்போய்ந்தானுமெதிருங்கழன்முற்
சித்தாந்தவேதாந்தச்சீர்மையிலை - முத்தி
யநிர்வசனமின்பவதிதமெனிலாங்கே
பினமிடுதல்கன்மம்பிளாய். (ருஉ)

சிந்தைபயமிலச்சைசிலமருவருப்பு
*வந்தைவிடுஞ்சாந்திகுலமாசார - மிந்தவழி
யெட்டுஞ்சிவயோகிக்கில்லையெனமாமறைக
ட்டும்பெருமுரசந்தான். (ருங)

தத்துவத்தாரல்லார்சலசந்திரனைப்பார்
தத்துவத்தார்செய்யுந்தவாதவங்கள் - சுத்தக்
ககனமழையாற்கழுவிக்காற்றைக்கனலாற்
றெகனஞ்செயல்போற்றெளி. (ருச)

காலனுக்குப்பாவமென்றுங்காற்றுங்கதிரவனுஞ்
சிலமிலாரென்றுஞ்சிவயோகி - மேலொன்றைச்
சுட்டுவதுந்தம்மைச்சுழற்றிவிடாதாட்டுமலக்
கட்டின்பிராந்திவலுக்காண். (ருரு)

நாயேறிவீழ்ந்தென்னடாத்துகிலென்ஞானிக்குப்
பேயாஞ்சகம்பழித்தென்பேணுகிலென் - றோயார்
பெருமைசிறுமையிலைபின்னுமுன்னுமில்லை
வரைவற்றுவேண்டியசெய்வார். (ருசா)

சன்மார்க்கமேமுதலாய்த்தாதமார்க்கத்தளவுந்
தன்மார்க்கமானவெவ்கள்சம்பந்தன் - றன்னைத்
துறவியரசுசுகியோகிபோகி
யறவன்மறவனெனலாம். (ருஎ)

*அகர்தைஎன்பது=அந்தையென்றிடைக்குறையாயிற்று.

தானல்லர்தன்னநல்லர்தத்துவசாலத்தலைவர்
மேனிசதாநந்தம்விளையுமிட - மியானைக்கைப்
போலேயிவருடம்பிற்போகமெலாம்பூசையிந
ஞலேசகம்பிழைக்குமெண். (ருஅ)

பூசிமுடிப்பனவும்பூண்பனவும்பொற்றுகிலு
மாசைமிகுந்தவரசியர்க்காங் - காசிற்ற
முண்டையர்க்காகாசீவன்முத்தனுக்குப்போகமல்லாற்
குண்டையொப்பார்க்கேனிதுவாகும். (ருகூ)

ஆனைமதப்பட்டாலலங்காரமன்றிநாய்
தானுமதப்பட்டாற்சரியாமோ - ஞானி
தடைமீறினுஞ்சதுராகுங்கல்மி
கடைமீறலாகாதுகாண். (கூ0)

அதிபக்குவத்தாற்கநுக்கிரகஞ்செய்யும்
புதுமைக்குச்சாத்திரங்கள்போதா - திதுவென்னுப்
பேறேயனந்தம்பிரகாரம்வந்தானும்
வேறேயனந்தவிதம். (கூக)

அறியாமைநீங்கியறிவாயறிவே
யறியாமலாயிரண்டுமற்றுப் - பிறியாதார்
தன்னிழப்பின்ஞானசமாதிக்குச்சாதகரா
மந்நிலைக்கேசீவன்முத்தராம். (கூஉ)

மகவான்கண்பார்த்தவர்க்குமாண்பாய்த்தனக்குப்
பகமாயிலச்சைவிடாப்பண்பாய்ச் - செகமாணக்
கண்ணூரிபோல்வேடக்கண்ணுடிகாட்டுதேவ
மெண்ணூழிகாலமிருந்தென். (கூங)

முதலாவது வேதாகமப்பொதுவிலுபதேச முற்றிற்று,

---

## இரண்டாவது.

# சத்திநிபாதத்துத்தமரொழிவு.

சரிதாதிநான்கினுக்குஞ்சாலோகமாதி
வருமாறெனக்கவிந்தவள்ளல் - குருராயன்
ஞானத்திற்பக்குவர்களாவர்க்குபதேச
மானத்தையுநிகழ்த்தினான். (௧)

கின்னரியைத்தொட்டவர்போற்கேட்டவளவுக்களவு
சொன்னதலவெங்கள்சுவாமியுரை - மன்னடத்தி
லானந்தமூர்ச்சிதர்கையாடகயாழ்தன்னிலே
கானநலம்போலமொழிந்தான். (௨)

சும்மாதேபார்த்திருக்கச்சுத்தியாமுத்தமர்க்குத்
தம்மாய்வார்க்கோருரையேசஞ்சீவம் - மென்மேலும்
மாற்றஞ்சகுனப்புள்வாக்குமதுவுண்ட
போற்றும்பியின்பாட்டுப்போல். (௩)

முலைமுதிரநாணமுதிர்ந்தடங்கிமூடிக்
கலவியிலேநக்கினத்தைக்காட்டற் - சலனைபய
னானாலுந்தம்பனைசெய்தானந்தமாக்குவது
போனாலாமிந்தப்பொருள். (௪)

பஞ்சமலமும்பசுவனந்தமும்பதியு
மஞ்சுதொழிலுமவத்தைகளுங் - கிஞ்சறிவுங்
கேட்டுச்சரிதாதிசெய்துகிலேசங்கெடாக்
காட்சிமெழுகிற்கனகங்காண். (௫)

வாதிவடத்தினமுமாமருத்துவன்பிணியுஞ்
சாதித்தவீரன்மேற்றம்பலமுந் - தீதுபோன்
ஞானத்திலின்பைநசிப்பிக்குநானதுவா
மூனத்தையாரொழிவிப்போர். (சு)

மயலற்றார்கேட்கமகிழ்ந்துரைத்தவார்த்தை
யயலுக்குபதேசமாகுந் - துயிலாத்
தொறுவனைப்போனின்றுகேடேசமூக்குநோயு
மறுமுறைத்தோநாமுரைப்பதை. (எ)

அண்டமுதலாயனந்தம்பிறப்பில்லிதங்
கொண்டுநராய்வினைகள்கூறுத்துத் - தொண்டிப்
சரிதாதிசெய்துதவச்சார்பினிற்போர்க்
கரிதானபக்குவநாலாம். (அ)

மேலைச்சுகம்வெறுத்துமேலொடுகிழற்றுவெறுஞ்
சாலப்பொய்யாயுடலார்தானார்தன் - மூலமா
சென்றுதெரிவிப்பாரையெய்துவோமென்றிரண்டா
யொன்றுபடத்தேட்டமுதிக்கும். (கூ)

வேர்க்குங்கண்ணீர்ததும்புங்கம்பிக்குமெய்ந்நடுங்கும்
வார்த்தைநழுவுமனம்பதறுங் - கார்க்கதமாய்க்
காந்துமுரோமாஞ்சலியாகுங்காதலித்தார்க்
கேய்ந்தகுணங்காணிவையெட்டும். (கo)

அசைநோட்டஞ்சிந்தைபெருமூச்சறியாச்
சுரமூட்டமெல்லாந்துறத்த - லுரைதோற்று
மானமவுனம்விகளமறவைசா
வானவிவைபத்துமவத்தை. (கக)

கேட்டந்திரண்டதிருமேனியுட்புறம்பாய்க்
காட்டுமெளவேகரைபுரண்டு - கேட்ட
வதிபக்குவத்தார்க்கசும்புறமென்றுறு
விதிவைத்ததீக்கையாமென். (கஉ)

பரிசித்துஞ்சிந்தித்தும்பார்த்துமலமாயைக்
கருமத்தைஎல்லாங்கழற்றிச் - சரிநாதி
வாதனையாம்போதமயக்கத்தைவாக்காலே
போதைசெய்துபோக்கிவிடப்போம். (கங)

காலமறைதேசமறைகன்மறைபோற்காண்பாரு
பாலுனும்புள்ளிப்பிமீன்பக்கிநீக் - காலு
மிரும்பினீர்மின்னலிலேயேற்றபணம்பார்ப்பார்
தரும்பொருளைக்கொள்ளுவார்தாம். (கச)

பதியிறக்கக்கேட்டிறந்தபத்தினிபோற்பால்போ
லதிமோகிதீப்புகல்போலன்பாம் - விதவையர்போற்
கன்னன்கடையிற்கொடைபோலக்காணலாந்
தன்னையிழவாதிழத்தலுன். (கரு)

மாற்றுப்பலவகையாம்பொன்னேடைவைப்பான்போற்
றேற்றிச்சிவாகமத்தாற்செப்புகினு - மேற்ற
பரிபாகத்தாலேபழுப்பாம்பலவு
மொருபாகமன்றென்றுணர். (கசு)

கல்லையுருவாக்குங்கழற்றியிலேயில்வாழ்க்கைச்
சில்லநீர்போலத்தெளிந்துவருந் - தொல்லுலகங்
கான்றசோறுக்குங்கதலித்தண்டைக்கனலி
லூன்றல்போன்ஞானமுதிக்கும். (கஎ)

இரும்பைவடிவாக்குமியல்பினர்க்குப்பச்சை
மாஞ்சுடுமாபோன்ஞானம்வாய்க்கு - மிருந்தவிடம்
நீர்த்தாமரையிலைபோனீங்குமுலகமெலாம்
பேய்த்தேர்போற்றோன்றும்பிரிந்து. (கஅ)

மரப்பாவைபோலுடம்பின்வாதனையைமாற்றிக்
கரிக்கீக்கவர்வதுவாங்காமித் - திருக்க
மனைபொதுவின்மண்டபமாம்வானோர்கள்வாழ்வுங்
கனவெனவேதோன்றியிடுங்காண். (கசு)

வெண்ணெயுருபாவையர்க்குஞானம்விளக்கின்மே
லண்ணின்மயிர்பஞ்சாகுமாசையில - கண்ணீ
சொழுகும்பொழுதறியாதுள்ளுருகிவிம்மி
யழுதுசிரிப்பார்புளகமாம். (உ0)

புளிசேர்பழமானற்போற்புறம்போடுள்ளின்
முளைதானும்வேறாய்முளைபோய்த் - துளைமாண்ட
வூசிக்குப்பாசமொழிந்ததுபோலொப்பாருக்
காசைக்கேடானந்தமாம். (உக)

அருணனுதையம்போற்றும்வீழ்வாராசை
பெருகுவபோற்கப்பற்பிழைத்துக் - கரைகாணு
மாபோற்சிறையுமரும்பிணியுநீங்கியிடு
மாபோலதிசயம்போலாம். (உஉ)

உடல்பொறிகளுட்காணத்தோடுகுணம்வாயு
விடவிடவேநாதாந்தவீடு - நடுநிலையாய்த்
தன்னொழிவும்பேரின்பசாகரமுஞ்சந்தழிவா
ரென்னபடார்கண்டறியாரே. (உங)

அறிவுமறிவானுமறியாமலையு
மறியிற்றடையேதவர்க்குப் - பிறிவரோ
வாகாயஞ்சூழைறகொளிலஞ்சியடுக்களக்குட்
போகாதுபோலாம்பொருள். (உச)

பொய்போலமெய்யுமறியப்பெறுப்போக
சையோகர்க்கொன்றேடுஞ்சார்பில்லை - துய்ய
விழிக்குளுதித்தவிரிகதிர்போற்றம்மை
யழிந்ததுவேயாச்சரியமாம். (உரு)

தன்னையிழப்பார்க்கென்னசார்வூழிசங்கார
மென்னிலொளித்தெங்கேயிருக்கலாம் - முன்னே
புலிபார்க்கப்போனகதைபோலிமையாநாட்டஞ்
சலியாமன்மூடுந்தனை. (உசு)

அறிந்ததுவாய்நின்றவறியாமைகண்டு
மறந்தறியார்வாழாதுவாழ்ந்த - வெறும்பாழ்
விளைந்தசுகஞ்சொல்லில்வெளியைப்படியா
லளந்தறியுமாபோலவாம். (உஎ)

அறிவுக்கறிவென்னுமாகமங்கள்சுத்த
வறிவென்னும்வேதத்தினந்தம் - பிறியா
நிலைக்குச்சரியாகுநீயென்றுனனென்
றலைக்குமரிபிரமரை. (உஅ)

இரண்டாவது

சத்திநிபாதத்துத்தமமொழிவுமுற்றிற்று.

ஆ திருவெண்பா - சுக.

## மூன்ருவது.

# யோகக்கழற்றி.

சரிதைகிரியைகளைச்சற்ருக்கிச்சாகாக்
கருமயோகத்தைக்கழற்ற - வரிதவர்க்குத்
தோன்றியதுபொய்யாகக்காண்கையிலேதோன்ருத
வூன்றியபோதங்கழலுமோ. (க)

அட்டமாசித்திகளுமத்துவாமூர்த்திகளுங்
கிட்டிலதற்கங்கங்கேகீழ்மேலாய் - விட்டு
வரும்போதுந்துக்கமாய்வந்துவந்துமாய்ந்து
பெரும்பாவஞ்செய்யப்பெறும். (உ)

அறிவடங்கா வாயுவடங்கவசைவற்றுத்
தறியிருந்தாற்போலச்சமாதி - பெறுகி
னடந்தகுருட்டுமேனஞ்சருந்திப்பாழூர்க்
கிடந்தகுழிப்புக்கதினுங்கேடு. (௩)

கவிப்பயனுமாதனமுங்கண்சிமிட்டாநோக்குந்
தவப்பகடியாட்டங்காண்சார்வைத் - தவிர்க்கின்
மறந்தறியலாகாமலட்டறிவாய்வான்போ
னிறைந்துதளும்பாமனில். (ச)

தத்துவமுட்டாக்காய்ச்சமாதியினைச்சார்போதப்
பித்தனென்பார்பேரிற்பிழையுண்டோ - புத்திபோய்க்
கம்பக்களிறுகட்டக்கல்லினூர்க்காணுமிவ
ரம்பாத்தைவந்துபிடிப்பார். (ரு)

நெய்யினிழற்போனிழலிற்புருடனைப்போற்
பொய்யில்விகற்பம்புகுவதுவுந் - துய்ய
வொளியோசையாகியொடுங்குவதுந்தம்மைத்
தெளியாதார்செய்யுஞ்செயல். (௬)

சாக்கிரந்தேகேவலத்தைச்சார்ந்துவிடத்தத்துவத்தை
தாக்கியொழிப்பார்போனுழைவதையு - நீக்கியே
கண்ணாடிபார்த்தகுரக்கறிவாய்க்காண்பதையு
மெண்ணாவத்தையறியில். (௭)

உபதேசப்பித்தோவுபமானப்பித்தோ
விபரீதமோபழக்கோவேறோ - தபசிநி
கண்மூடாவிண்மூடத்தேடுங்கவுசனைபோ
லெண்மூடாயோகமிதுவென். (௮)

வாலேமுகமாய்வசவானையேறினார்
போலேயுன்போதமோபோய்த்திண்டுஞ் - சாலப்
பெருஞ்சிரிப்பாந்தன்னைப்பிடித்தாட்டும்பேயைத்
தெரிஞ்சிருக்கத்தேடுஞ்செயல். (௯)

குறங்குகுத்திக்கொண்டுகுறோக்கைகத்திக்கூட்டை
மறந்தழைத்தாற்றூக்கம்வருமோ - வெறுங்கெடுவீர்
தன்னையழிந்தெழுந்தசச்சிதானந்தத்தை
யுன்னிலொளித்துவிடாதோ. (௧௦)

மனவாக்குக்காயத்தான்மாய்ந்தளவைமாண்ட
தெனவாய்ப்பறையறையிலென்னா - நினைவதெலாஞ்
சாக்கிரப்பொய்தானுந்தனியனலதற்பரமு
நிக்கமற்றபூரணமென்னில். (௧௧)

வாயுமனங்கண்ணைசையாவா றடக்கிமக்கினமாய்
நீபுதைந்துபோய்க்கூடனீதியோ - காயத்துக்
குட்புறம்பாய்நிதானுயுண்டில்லையாயதற்கு
மப்புறமாய்த்தாக்கற்றதை. (கஉ)

ஓட்டாதிருக்கவென்றுலொட்டாதுறக்கமாஞ்
சுட்டாதிருக்கிற்சுடர்க்கொழுந்தாந் - துட்ட
மனத்தோடுவாயுவைநீர்மண்டையிலேவைக்க
நினைப்பீரிதென்னநிலை. (கங)

கூட்டிற்குரங்கைநிழற்கோரணிக்கூத்தாமனத்தை
யாட்டிப்பிடித்தாரடக்குவார் - காட்சியறச்
சும்மாதிருக்கிலசையாதுசுற்றுவிறி
சம்மானைபம்பரங்காணும். (கச)

பற்றுதுபோதும்பதறும்பழக்கமதைக்
கற்றுலென்னுகக்கலக்காது - சற்றேநீ
தீண்டிவிடிற்றுன்காண்செனனமரணமது
மாண்டுவிடினீசிவமாவை. (கரு)

அறிவாயிரீர்மயக்கமாகாதசையில
விறிசாய்விடாதோவிகற்பம் - பிறியாத்
தராசினுனிபோற்சமாதிவரின்ஞான
விராசனுமக்கொப்பாரெவர். (கசு)

நீர்க்குப்பதமுநெருப்புச்சுடுந்தொழிலுங்
காற்றைச்சலிக்கவுமார்கற்பித்தார் - ஏர்க்குமிது
போகாமனுதிபுதைக்குநிழற்போலாநி
யாகாயம்போற்பாரறும். (கஎ)

மண்ணைமலையைமறிகடலைவானகத்தை
யெண்ணிலளந்தறியவெய்துமோ - வுண்மையைநீ
யுண்டென்னிலோர்வார்த்தையுண்டல்லாதுன்னெழிவைக்
கண்டறியிலன்னியமாங்காண். (கஅ)

உதித்தொடுங்கும்பொய்க்காருபாதானமென்ன
துதிப்பையுநிப்பாலொடுக்கிற் - பதைத்தெழுந்த
பந்தன்றேசாட்சியைப்போற்பார்வேர்பறித்தமாங்
கொந்தலர்ந்துகாயாதொக்கும். (கசு)

சுட்டுப்போதங்கழன்றசுத்தமரைமாத்திரையின்
மட்டுத்தானற்றநிஷ்டைவாய்க்குமாற் - கெட்டேன்
றலைச்செய்யுமானந்தஞ்சற்றேபால்வாரி
முலைக்கண்ணிற்றேன்றுமுறை. (உ0)

ஆகாயத்தேபலவுந்தோன்றியடங்காதோ
நீகாயத்தோடழுந்திநீங்கியரு - ளாகாதோ
வென்றுசலிப்பானேனெதிரற்றபூரணத்தே
யொன்றுமிலைகாணுனக்கு. (உக)

பழக்கங்கொடியதுபார்பாறையினுங்கோழி
கிழிக்கும்பொலியைக்கிளறும் - விழித்துங்
குருடர்க்கொளிபகையாய்க்கூசிக்கோல்போடா
ருளைப்பகுக்குமான்மா. (உஉ)

கட்டியநாண்விட்டாலுங்கந்தகலாக்கன்றுகளைத்
தட்டிப்புறப்படுத்துந்தன்மைபோ - லொட்டொழித்து
நின்றாற்போனீசிவமாய்நில்லென்றுநீக்கமறத்
தொன்றாக்கிலொன்றிரண்டாகும். (உங)

குரங்கைநினையா திருமென்றுகூறத்
திரும்பியதுவேதியானம் - வருங்கதைபோ
னீசிவமாய்நில்லென்றானீங்கியதுவாய்நினைந்து
மாய்வையதுவன்றேமலம். (உச)

மணிப்பாம்பிருளின்மறைந்திருக்கத்தேடுங்
கணக்காந்தற்போதத்தைக்காட்டி - யுணர்த்துகினு
நீரிற்கிணறுநிழலுயுத்தமும்போலா
மாரித்தைநீக்கியிருப்பார். (உரு)

உட்புறம்பாம்பூசனையுமியோகசமாதிகளுஞ்
சுட்டறிவுகெட்டவர்போற்றூங்குவதும் - விட்டுப்
பகல்விளக்குமுச்சிப்படிகமும்போற்பாச
மகலநிற்பார்க்கார்சரியொப்பார். (உசா)

இருட்கேவலத்தின்றெழுப்பியெதிரிட்ட
மருட்கேவலசகலம்மாற்றித் - திரிச்சுடர்போற்
றன்னறிவுதின்னிக்குத்தானுணவாய்ப்போவதல்லா
லுன்னுதலேயோட்டுதல்காணும். (உஎ)

அறிந்ததெல்லாம்பொய்யென்றவத்துவிதியார்க்கும்
வெறும்பாழிலூன்றல்விடாது - பிறந்திறப்பை
யானுலுனதொழிவுமானந்தமாமுதிப்பும்
போனாற்காணுன்பிறப்பும்போம். (உஅ)

அறிவுக்கறிவாயகண்டமாய்நின்ற
நிறைவைக்குறையநினைந்து - மறவையுமாய்த்
தாமேசிவத்தைப்படைத்தழிப்பார்தற்றேடம்
போமாறிலைப்பிறப்பேன்போம். (உகூ)

மறப்புநினைப்புமயக்கும்விகற்பும்
வெறுப்பும்விருப்பும்விடாம - லிறப்பேனைப்
பானுவும்வேதியும்போற்பார்த்தும்பரிசித்தும்
ஞானபந்தன்றானக்கினான். (௩0)

மூன்றாவது யோகக்கழற்றி முற்றிற்று.
ஆ_ திருவெண்பா - ௧உ௧.

---

## நான்காவது.

# கிரியைக்கழற்றி.

---

தத்துவந்தையெல்லாஞ்சடமென்றுதாக்கற்றுச்
செத்தசத்தின்கண்போற்றிரியாது - வைத்தெடுத்தும்
பூரணமேயென்றழைத்துந்தேடிப்புரண்டழுதுங்
கோரணிகாட்டும்பேய்க்குவால். (௧)

கிரியைக்கிளைத்துவந்துகேட்டவர்க்குச்சும்மா
திரியச்சுகம்விளைத்தசிமான் - குருவன்றிச்
சற்றேபதைப்பத்தரினுஞ்சகம்படைக்கக்
கற்றானுங்காலனுமாங்காண். (௨)

அக்கினிதேவற்கசீர்த்தியென்றுசுக்கரைத்து
வைக்கோலான்மூடிமலையடுப்பிற் - றக்கியாய்
நீரைக்கமுவிநிழலைப்புதைத்தளப்பா
ரரைப்போல்வாரென்னலாம். (௩)

நேர்க்கும்வழிக்குந்துயரில்லைநீந்திநடந்
தார்க்குத்துயரென்றறிவறியா - மூர்க்கரை
யாற்றுக்குவாய்கட்டியம்பாத்துக்கேணியிட்டுக்
காற்றுக்குக்கால்பிடித்தல்காண். (௪)

ஆகாயம்போவார்க்குமாவிகையோவாழ்கடலோ
மீகாமன்போற்றிரியவேண்டுமோ - யோகிக்குங்
கன்மமோபூரணன்காண்காலமுமாகாயமும்போ
லென்னதொழிலையியற்றும். (௫)

நெருப்பில்விறகுதியாநெய்யிற்பாறேன்று
வருக்கனிருளையடர்த்தாற்போன் - மருட்கெடுத்த
ஞானத்தின்பேர்கிரியைநாசமெனின்ஞானிகளு
மூனத்தொழிலுழைப்பாரோ. (௬)

கிரியையான்ஞானங்கிடைத்தாலுங்கேடு
கருவால்வருவதுபோற்காணு - மொருகோடி
சூரியரைக்கூரிருளாலேசுருட்டனீரகில
காரணனைத்தீண்டநினைக்கை. (௭)

சுகாதீதம்வேண்டிற்றொழில்செய்வோமென்று
னகரோதுயில்வார்நடந்தோ - விகாரமெனச்
சாத்திரமும்பூசைச்சமாதிகளுஞ்சார்போதக்
கோத்திரங்காண்மாயைக்குழாம். (௮)

தொழிலிறுதிதானேசுகவுதயமென்றுற்
றொழிலுதயந்துக்கமெனச்சொல்லோந் - தொழில்செயினும்
வந்திப்போகம்போலவுண்டுடுத்தன்மாத்திரமாய்ச்
சிந்திப்பாரைப்பேணிச்செய். (௯)

சும்மாதிருக்கவைத்தசூத்திரமாஞ்சாத்திரத்தை
விம்மாக்கதறுவதும்வேலைகளுந் - தம்மறிவா
னீட்டிப்பிடித்திருக்குநிஷ்டைகளுஞானிகண்முன்
காட்டும்பரியாசகம். (௧0)

குடையுஞ்செருப்புங்கொடுநடப்பதல்லாற்
படியும்விசும்பும்பரப்பி - யிடையாடு
மாத்திரம்போலேசமயவாதமனம்போதாத
சாத்திரங்கற்றார்வீடுற்றார். (கக)

அறிவாலேபற்றியநுபவித்துவிட்ட
கிறியால்வருமோகெடுவீ - ரறிவாய்நீ
ராம்போதறிவிப்பான்றானுமவையிரண்டும்
போம்போதும்வாராப்பொருள். (கஉ)

அழிப்பேயவனுக்குமிச்சையதுவா
னிழப்பேயுனக்கிச்சையென்னு - மிழப்பை
யறியாததுகாணறியாவஞ்ஞானங்
கிறிகேளுஞ்போதங்கெடல். (கங)

மருந்துபிணியோடேமாண்டுபுகைதீ
யெரிந்தவிறகோடிறக்கில் - விரிந்த
தொழின்மனத்தின்மட்டேநீதோயுமதென்னுடி
நிழல்புதைத்தாற்போலெதிர்போய்நில். (கச)

காணுமறிவுநீகாட்டறிவுநாமவற்றைக்
காணக்கழலுங்கழற்றியிலே - நாணி
நமைத்திரும்பிப்பாராதேநான்றானென்றதே
யமிழ்த்துகரகம்போனிற்பாய். (கரு)

வதுவைச்சடங்கதனைமைதுனமாக்கொண்ட
புதுமைச்சிவானந்தம்போதும் - பதையா
விளக்கொளியிலெண்ணெய்வியாபியானாற்போற்
கொளக்கொடுத்தல்சத்தியமாக்கொள். (கசா)

நான்கா - வது கிரியைக்கழற்றி முற்றிற்று.

ஆக திருவெண்பா - கஙௗ.

---

## ஐந்தாவது.

# சரிதைக்கழற்றி.

நடந்துங் குளித்து மிதுநல்ல நாளுனே
விடுந்தொழிலான்மெய்வருந்திவீடென் - றடங்காதா
சென்றுசுகமேயிருப்பரிப்போதே துக்கமிவர்க்
கென்றெதிர்போயின்பமுதிக்கும். (க)

உடலாலுழைத்தாலுடலொழியுமென்று
கெடுவீரிதையெங்கேகேட்டீ - ருடலே
நடையாடியபிணம்போனன்போய்த்திரியக்
கிடையாதோவென்றுகேளீர். (௨)

எந்தவூர்நீரென்றாலிப்போதிருந்துநாம்
வந்தவூர்தன்னைமறந்தோமே - லந்தவூர்க்
கின்றுநாம்போம்வழியேதென்னிலுமக்கேழுலகு
மொன்றுபோலொன்றுதோன்றும். (௩)

வேட்டியுந்தாழ்வடமும்வெண்ணீறும்வெண்பல்லுங்
காட்டுவதுஞானக்களவுகாண் - தேட்டமற்றோன்
பூரணன்காண்சிற்றறிவன்பொய்ப்பாசமென்றறிந்தார்க்
கோர்வடிவும்வார்த்தையுமுண்டோ. (௪)

கல்வியாய்ப்புத்தகமாய்க்காவிகடுக்குட்கட்டாய்ப்
பல்லின்வெளுப்பொத்தபசுமார்க்க - மெல்லே
கழன்றதியானத்திற்கண்சிமிட்டுமோங்காண்
சுழன்றபெருமாயைத்தொழில். (௫)

ஞானக்கிரியை நடிப்பவர்க்குநாடோறும்
போனந்தளவேபுசிப்பன்றி - யேனுந்
துறவாயவாவறுத்துமெய்யுணர்ந்ததூய
வறிவார்க்கறியாவின்பம். (௬)

இன்பேயறிவுக்கிடம்புள்ளினைந்ததுபோற்
றுன்பேயறுப்பொருப்பாய்த்துக்கிக்கு - நன்குணர்தாற்
பேரின்புக்கிச்சைபிறந்ததினிக்கேளுனக்குப்
பேரின்பந்தேடிப்பெறுய். (எ)

பேரின்பமுன்னைப்பிரியாதுன்துண்மையது
வோரின்பமாய்விடயந்தூடுதிப்பும் - பேரின்
பழிவிலேதோன்றுமறிவுமயலா
மொழியுமிரண்டின்பமும். (அ)

விடயமுதித்துநின்றுவிட்டவிடங்கிழ்மே
லிடைவிடாதேநிறைந்தவின்பந் - தொடுவரோ
தோன்றியழிவதுவேதுக்கசுகமுன்னுண்மை
தோன்றுவடங்காச்சுகம். (௯)

எங்கும்பரிபூரணமென்னிலீதல்ல
வங்கங்காமென்னும்போதங்கிலேயோ - பங்காதே
ளாகாயந்தீண்டிவிடுமற்பவறிவழிவி
லேகாண்பேரின்பமுதிக்கும். (௧0)

உடம்புள்ளமட்டும்விடயமொடுங்கா
வொடுங்குகிலோகேவலமாமும்ப - ரிடம்புட்
பறந்தாற்கலங்குமோபாசத்திறுண்மை
யறிந்தாற்சுடாத்தடைபோலாம். (௧௧)

உடலிருந்தென்போயென்னுருவருவமூன்று
மடைவர்தொழிலுமனுதி - குடமுடைத்து
மண்ணென்னவேண்டுமோமாயாவயிந்துவத்து
முண்ணின்றுபார்த்தியிப்போதும். (கஉ)

கயிற்றரவுங்கட்டையினிற்கள்ளனும்போன்மாயா
மயக்கமற்றவேதாந்தவாழ்வு - முயற்சிகெட்ட
வானந்தாதீதத்தேயாணவாமாகமமுந்
தானந்தினுர்க்குச்சமன். (கங)

என்னையென்னையென்னையேகமிரண்
டென்னுமற்சும்மாதிருவென்று - சொன்னன்
றிருஞானசம்பந்தன்சிகாழிநாட
னருளாளன்ஞானவினோதன். (கச)

ஐந்தாவது சரிதைக்கழற்றி முற்றிற்று.
ஆ திருவெண்பா-கடுக.

---

## ஆறாவது.

# விரத்திவிளக்கம்.

---

அறிந்தவிடத்தின்பதுன்பமாகாததுவு
மறந்தவிடத்தின்பமயக்கு - மறிந்த
வலியறிவுநீயென்றுனத்துவிதானந்த
முலையமுதமுண்டமுனி. (க)

அறுசமயத்தோர்க்குமறுதியிட்டகூடற்
றுறவாயவாவறுத்தறாய்மை - பிறவா
முடிகளசமுத்திமுயற்சியெல்லாமூத்த
கடைகருமநாசமிறுகாண். (உ)

வாசிக்குச்சாவீசர்வைதாற்பொருகதுபோ
லாசைக்கேடர்க்கிறுவாமட்டதென - நேசித்த
வொட்டையைப்போல்வார்க்காமுடம்பாசலூண்டழகும்
பெட்டருக்கிதாகாப்பிழை. (ரு)

பாசங்கழன்றுற்பசுவுக்கிடம்பதியா
மூசல்வடங்கழன்றதொவ்வாதோ - நேசித்த
பற்றற்றகண்ணேபிறப்பறுக்கும்பாட்டுமக்கோ
மற்றச்சமயமெங்குமாம். (சு)

உனக்குமெய்யாய்த்தோன்றியொழித்துவிடும்பாசம்
வினைச்சடமேயென்னில்விடம்போ - லுனைச்சுழற்று
மாறுலுந்தன்னையறியாததுன்னறிவு
தாறுகுஞானத்தடை. (ரு)

சிற்றறிவனும்மறைப்பைச்சேர்ந்தவடிவொண்படிகம்
பற்றுகினுமொன்றுகாப்பான்மைபோ - லுற்ற
வுருவசொரூபசுபாவமுனக்கு
வருமடைவுசொன்னேமதி. (சு)

நினைப்புமறப்பற்றுநிறைந்தவறிவா
யனைத்துடனுநின்றம்பரமாய்த் - தனக்கருளித்
தன்னானந்தத்தைத்தனக்களித்தசர்க்கரையே
யன்னானுக்கின்னவைமூன்றும். (எ)

அறிந்துபற்றிநின்றழுந்துமறபவறிவை
யறிந்துசுத்தியேபொறிவாய் - நிறைந்துசிவந்
தோயாமனின்றதுபோற்றோற்றமுதலேந்துடனுந்
தோயாமற்சுத்தத்துறவு. (அ)

கூரிருளின்மின்மினியின்கூட்டம்போல்வாழ்சகத்தை
யாரறிவாரந்தவறிவுதயஞ் - சூரியன்கா
ணுன்னிழலைக்கெடுத்தவுச்சியிலேவூனமறச்
சொன்னாரவத்தைகளைந்தும். (கூ)

மெய்யாகத்தோன்றிவிடும்பொய்யைவிசாரிக்கிற்
பொய்யாய்ச்சுவர்ப்பாம்பாய்ப்போமன்றி - யையா
தொழிலைச்செயிற்றுணுச்சோரனைப்போற்றேன்றிக்
கழலப்பறையறைதல்காண். (க0)

உலகத்தைமாயாவுடலைப்பொய்யென்று
லலகைத்தேர்போலறிவதல்லால் - விலகித்
துடைத்தொழித்தலாகுமோசொப்பனத்தீச்சூழ்ந்தாற்
கடக்கவிடுஞ்சாக்கிரம்போற்காண். (கக)

பொய்யென்றவார்த்தைபுரையற்றுமெய்யானன்
மெய்யென்பதுதேடவேண்டுமோ - மையிருளைத்
தீர்த்தவெயிலைத்திரும்பியசைத்திமைத்துப்
பார்த்ததிலென்சந்தையம்வைப்பாய். (கஉ)

வேண்டாம்பிறப்பென்றவார்த்தையினின்மெய்விடயந்
தீண்டாததிலேதெரியாதோ - காண்பீ
ருடம்புமிகையொன்றிலாமையேநோன்பென்
றடங்கவடங்கினுரை. (கங)

ஆருவது விரத்திவிளக்கம் முற்றிற்று.

ஆ திருவெண்பா-ாகூச.

---

## ஏழாவது.

# து ற வு.

தேடப்படும்பொருளைச்சிக்கனவாகப்புதைத்துங்
கோடிக்கொருநிமிடங்கொள்ளுகிலுங் - கூடாத
வாறுலைவின்கழிக்குமாறுடைப்போன்மயக்கம்
பூறார்பொய்கண்டுதுறப்போர். (௧)

ஊர்க்குருவியும்வளர்த்தகுஞ்சுமொருமனையிற்
பாக்கனையும்பார்த்திதுநம்பற்றென்றெ - மூர்க்க
ரரிபிரமரிந்திரர்கள்வாழ்வறிந்தநம்வாழ்
வொருபொருளோவென்றொழிவாரோ. (௨)

பட்டினத்துப்பிள்ளையினைப்பத்திரகிரியைப்பரவி
விட்டுவிடமாட்டார்வெறுவிடர் - வெட்ட
வெறுவெலும்பைநாய்கறண்டவேந்தர்வரநாய்பார்த்
துறுமுவதைக்காட்டுவோமோ. (௩)

நாடுநகர்விடுடையாடாய்தந்தைநட்புமக்கண்
மாடுகுலம்பொன்னுடம்பின்வாதனைகள் - கூடக்
கொடுந்தவலைக்கண்ணித்துடக்கிதனையிப்போ
விடப்பெறுவரேன்பிறப்பார்மேல். (௪)

தின்னிற்றிமிரில்விடம்பிடித்துத்தீர்ந்துவிடும்
பொன்னைநினைக்கப்பொறாதுகாண் - பின்னை
மருந்தாலுமந்திரத்தினாலுந்தவிராப்
பெரும்பாவம்பெண்ணிற்பெரிது. (௫)

செல்வமிளமையுடம்புபேய்த்தேரென்று
சொல்லுவதென்காணுரோசுட்டதுபோ - லொல்லை
விடுவோர்பிறப்பிறப்பின்மீளார்கண்மீண்டாற்
றொடுமோசிவனைத்தொடா. (௬)

ஆசையினலற்பசுகமாயழிந்தாற்பேரின்ப
யாசையின்போக்கென்றறியலாகாதோ - வாசை
நளிகைக்கமூக்குவந்தநாசமெனநாடித்
தெளியப்போமற்றிவையைந்தும். (௭)

உதயந்தொழப்போவார்க்குள்ளும்புறம்பும்
புதையவொளிவீசுமாபோலே - பதிமோசி
திக்காட்டிலேகொடுக்கச்சென்றவாகண்டக்காற்
றுக்காததன்றேருதவம். (௮)

ஊமைமணியாட்டுகினுமோசையழிந்தாற்போல
வாமதுபோனிற்கவரிதுகா - ணுமாய்
வளர்ந்தவசத்தையெலாமாளமாக்காலா
லளந்தெறிந்துபோட்டதுபோலாம். (௯)

தருவாதிநான்கினுக்குஞ்சார்வழிந்துசற்று
றினையாதினைப்பாறிநின்றான் - மனையாமோ
காந்தக்கடத்தூசிகாற்றற்றதீபமென
வாந்தத்துவங்களயலாம். (௧0)

நாயலகைநெய்விரும்பிநக்குவதுநஞ்சிட்ட
பாயசமுமெய்ப்பரிசப்பாவைமிகச் - சாயாநீர்
வேட்கையசுணமிபம்விட்டின்மீன்வண்டிவையின்
சாட்சியைக்கண்டார்துறவாதார். (௧௧)

இடும்பைக்கேகொள்கலமாயேழ்நரகுக்கீடாங்
குடும்பத்தைக்குற்றமறைக்கு - னடுங்காரோ
வைவர்க்கொருவனறுதொழிலைச்செய்தலான்
மெய்மையைப்பொய்யாக்கிவிடும். (௧௨)

குரங்கிற்றனிச்சிகுடும்பக்குழாமும்
பெருங்குப்பையிற்காடிப்பெண்டும் - பொருந்துவரோ
காலனுந்தீயுங்கடலுமிருங்கல்லுமாய்
மேலுநரகாய்விடும். (௧௩)

கன்னனைப்போற்றன்னையறிவனோகாக்கையுடன்
மன்னுகுயில்போனவாறுபோ - லன்னியமாய்ப்
பேசாதுபோனதுறவிபிறப்பறுப்பார்க்
காசானுமென்றேயறி. (௧௪)

நித்திரைசெய்வீட்டினெருப்பும்பெரும்படையு
முற்றிப்புறப்பட்டார்முற்றத்தே - பித்தரைப்போ
லில்லென்றுசொன்னானுநிற்பரோவப்படிகா
ணில்லறத்தைநீத்தாரியல்பு. (௧௫)

கட்டுநெகிழ்ந்துவிட்டகள்ளனைப்போற்கங்குலிற்பேய்
வெட்டுகளத்தின்வெருவினர்போன் - முட்டத்
தொடர்ந்தபடைபிழைத்துத்தோன்றப்போவார்போ
லடங்கத்துறந்தேகுவார். (௧௬)

உடுக்கைமறந்தவருக்கூர்கரடென்றுண்டோ
வடுத்தயலாருண்டோபேயானாற் - சுடப்போட்
டெதிரிட்டதெல்லாமிழந்தார்க்கிருந்த
பதியைக்கொண்டுண்டோபயன். (௧௭)

தூக்கஞ்சுகமானசுட்டறிவுகெட்டவர்க்குத்
திக்குண்டோவெங்குஞ்சிவாலயமா - மக்கினிக்குப்
பிச்சைபொதுநிழனீர்பேரிதுவேபேசார்தம்
மிச்சையிருப்பேகாந்தத்தே. (௧௮)

அங்கக்காரன்றுதிப்புநாவிசுவையானதுவுஞ்
சிங்கிகுளிர்ந்ததுவும்போற்செகத்தோர் - சங்கத்தைத்
தீண்டுமனமேபகையாய்ச்சேராதுடலோடே
மாண்டுதிரிவார்துறவாவார். (௧௯)

பொன்மலைமேலாகாயம்போவார்க்குப்பூமியுள்ளோ
ரென்னவேநாதாந்தமெய்த்தினரை - யென்னருகே
வாவென்றுபாற்கடலில்வாழரியைமண்டுகேங்
கூவுந்தகைமையதொக்கும். (௨௦)

கும்பிட்டுங்கீர்த்தித்துங்கோடியுபசாரம்
வம்பிட்டபத்திவலைவழியை - நம்புவரோ
வூணுதிவாதனைகளொன்றுதவப்பெருமை
வீணேவிளைக்குமெனின். (௨௧)

கருமந்திரிவிதத்திற்கட்டவிழுங்கால
மரவுந்தவளையும்போலாகி - யிருதலையிற்
கொள்ளியெறும்பாயுடம்பேகூற்றாகித்தோற்றுமெனி
னுள்ளினருமூருமென்னாகும். (௨௨)

பிறவாதயோனிபிறந்துபிறந்தெல்லா
மறிவானானென்றறியா - வறிவை
யறிந்துமீனண்டவழிபருந்திற்குஞ்சாய்ப்
பிறந்தவர்களேன்பார்ப்பார்பின். (௨௩)

அரசற்குடைமையளவற்றபேறே
பெருமையானாற்போலப்பெற்ற - வரிபிரமர்க்
கப்பாலாம்வாழ்வுமறுவாகியாதுமற
விப்போபெருமையிவர்க்கு. (௨௪)

சரிதையுடல்வெறுத்தறன்னையறிதல்
கிரியோகங்கூடாமைகேளாத் - திருஞானம்
வேறின்மைபேரின்பம்விட்டுநியாமேலிடு
பேறின்மைதானேபெறல். (௨௫)

ஏழாவது துறவு முற்றிற்று.

ஆ-திருவெண்பா-௱௮௯.

---

## எட்டாவது.

# அருளவத்தைத்தன்மை.

உண்டொழிந்துத்தேடுமுடம்பாரயோன்றுமுத
லண்டர்பதந்தப்பாலுமைம்புலத்து - முண்டு
மழுங்கினர்க்குப்போதம்வருந்தமாய்த்தோன்ற
வெழுந்தவருள்கெட்டேனிதென். (௧)

வாசகத்துங்கோவையினுமாணிக்கமாகவழங்
காசைத்துறையனந்தமாமதிலே - யாசை
யிருதலைப்பாலேகமெனவிரண்டாமித்தி
லொருதலைக்காமந்துறவன்றோ. (௨)

சாத்துவிதமெட்டாய்த்தசவவத்தையாய்த்தன்னை
நீத்தவனாய்த்தானாய்ப்பின்னேயமாய்க் - கூர்த்தநெல்லாஞ்
சுத்தவவத்தைத்துவட்சித்துகளற்ற
வத்துவிதர்க்கேதுமுதியா. (௩)

உரையொடுங்கிற்போதமுதிக்குமொழிலே
யருளாமதன்போக்கசையாப் - பரையோகம்
போனாற்சுகாதீதம்புண்ணியர்க்குப்பொய்யுதியா
தேனோர்க்குப்பல்விதமாகும். (௪)

கருவிகழலவரைநோக்காஞ்சிந்தை
பெருமூச்சாம்போதம்பிறியி - லருளாய்
வெதும்பியுடல்வெறுக்குமின்பாய்விகள
முதிர்ந்துறையுநாளுமொடுங்கும். (௫)

வேர்க்கும்விழிததும்பும்பொய்யறியின்மெய்வெதும்பி
யார்க்கும்விறைக்குமருளுதிப்பின் - வாக்குமன
நின்றுபரிபூரணமாநேயத்தேகார்க்கதமாய்க்
கன்றிப்புளகிதமாங்காண். (௬)

பேயைப்பெண்ணென்றிருந்தும்பித்தளைக்குப்பொன்றோற்று
மாயத்தூணுண்டுமனமாண்டுமயல் - போயந்
திடுக்கமேபித்தாய்த்தெளிமயலானாற்போ
னடக்குமருண்மேலிட்டநாள். (௭)

மலட்டுமகனீங்கிவரக்கண்டதாய்நா
லலத்திமகிழுமதுபோ - லுலப்பிலாக்
காலங்கழித்ததையுங்காணாத்தைதக்கண்டகளிப்
பாலுமழுதுசிரிப்பார். (௮)

நடைதளர்ந்துமெய்ம்மறந்துநாணமழிந்து
வுடறளர்ந்துகீழ்க்குாலிட்டுண்போய் - மடலெடுப்பாய்ச்
சத்திதிகெட்டுமனந்தாக்கற்றுச்சந்தழிந்த
பித்தர்க்குமாகாப்பிணி. (௯)

குறும்பாட்டும் புன்சிரிப்புங் கூர்ந்திமையா நோக்கும்
வெறும்போகஞ்சாய்ந்துவிழினும் - மறந்த

திகைப்பும்வி திர்ப்புந்திமிர்ப்பும்விறைப்பு
முகைப்புந்தெளிந்தறிதலும். (க0)

கால்வந்தவர்க்காட்டங்கைவந்தவர்க்காட்ட
மால்முந்திவந்தவர்வாய்ப்பாட்டு - மேல்கொண்ட
வானந்தவுல்லாசத்தாச்சரியமாசறிவா
ரூனம்போற்காணுமுலகு. (கக)

அறிவுபறிகொடுத்திவ்வாக்கையறமாறிப்
பெருதியிழப்புதியாப்பித்தி - னறிசென்
றலையற்றநீத்தமோசாளற்றகப்ப
லுலைவுற்றதோநிற்பதோ. (கஉ)

செகஞ்சிரிக்கந்தாஞ்சிரித்துச்சிபேயென்றோட்டி
லகம்புறங்காட்டேச்சுக்குற்றற்றுத் - திகம்பரியாய்த்
தானந்தம்பாடிவின்லிற்றட்டத்துணங்கையடித்
தானந்தக்கூத்துநடிப்பார். (கங)

விபரீதப்பூணுமுடையும்விளியா
லபிமானமுமவசாலாட்டுந் - தபசுபோற்
செய்யுஞ்சடங்குந்திகைப்புஞ்சிதம்பரத்தி
லையன்றனக்கறியலாம். (கச)

மாலயனுயிந்திரனுய்வாழுவதாய்மாளுவதாஞ்
சாலமயல்பார்த்துத்தலையசைப்பர் - ஞாலமயங்
குன்மத்தக்கோசணிபார்த்தோகோவெனச்சிரிப்பர்
தன்னைப்பார்த்தாடுவர்தாந்தாம். (கரு)

ஆசைமுதலானவனைத்தும்போய்நானதுவாம்
வாசனையுமாண்டுமறந்தறியா - நேசத்
துறும்போகவுல்லாசவூமைக்குத்தாடிக்
குறும்போக்குவந்துநடப்பார். (கசு)

கேடுஞ்சுகமுமுதலெல்லாங்கீழ்ப்படுத்திக்
கூடுஞ்சுகம்போலக்கொள்ளாதே - நாடுநகும்
பூனைக்கண்ணேரிபொருப்பேறிபோனுச்சிப்
பானுப்போனீயவரைப்பார். (கஎ)

சூலையும்பேயும்பிடித்துழல்வார்சும்மா நம்
போலறிவீரென்றுரைத்தபுத்திபோன் - மூல
விருளான்மறந்தறிவாரீதென்றுனென்பா
ரருளாலறிந்தறிவாரை. (கஅ)

மருண்மூகர்வாக்கறியவல்லரோமாயா
விருளேயொளியாயிருப்ப - சருளுருத்த
பேயனைப்பேயென்னுரோபித்தநாப்பா லிருட்கண்
பார்வைக்குப்பானுபகை. (கசு)

அடைப்புள்ளாயாளடர்ந்தவாமையாய்த்திக்கே
யுடுப்பதாயோர்ந்துழல்வார்க்கூரார் - நடைப்பிணமே
யூமைப்பேயாரெனினுமோலமிடுந்தேவர்குழாஞ்
சேமக்கோலாளிந்திரர். (உ0)

செத்தவரைப்போலத்திரும்பாமற்போகனுமா
மெத்திசையுமொன்றென்றிருக்கனுமாம் - முத்தர்தமக்
கண்டமனுச்சிற்றிலாடரங்கந்தேகமலாற்
கண்டிடுகைக்கேதுமிலகாண். (உக)

உடற்போகம்போகவுயிர்ப்பகைபோய்ப்பேறுங்
கெடத்தானுந்தன்னறிவுங்கெட்டோர் - நடக்கும்போ
தாகாயஞ்சாணிடல்போலாவதல்லாற்பூரணர்க்குப்
போகாவூருண்டோபுகல். (உஉ)

தருவனமென்றண்டுகுடைசாயமரையாய்வாழு
நாவனமென்மேல்கீழ்நடுவென் - பரமசிவன்

ருக்கற்றதுபோலருள்சிவனைச்சாராபோற்
றுக்கற்றூர்க்கெங்குஞ்சமன். (உக)

ஏன்னையருளாலறிந்துதானறிந்ததெல்லாம்போ
யிம்மைப்பெருவாழ்வையெய்தினர்க்கு - முன்னே
நடந்தறிந்தபோதநசிப்பேயிருக்கு
மிடம்புறங்காடென்பதில்லை. (உச)

காமாதிவிட்டுக்காமேகலமாகிப்
பூமிநேகைகாலைப்போர்த்துறங்கி - நாமகுணஞ்
சாதிகருமமெனும்வாதனையிற்றூக்கற்றூர்க்
கேதுசமயமெனலாம். (உரு)

ஞானிக்குலகநடையென்றுநாம்பார்க்கிற்
சினக்கண்ணாடியொடுநீபமுமா-மேனோர்க்கும்
விப்பிரட்டமேபோலவேறும்விகாரியோ
வப்பாக்கன்றியறியான். (உசு)

மூர்க்கனனுசாரிமூடனெனப்பண்டிதனும்
மேற்குலமாமாசாரவித்ததெனப் - பார்க்கி
லளவைக்களவாகியப்பலாஞானி
தெளிவைத்தெளியாததென். (உஎ)

அஞ்சனக்கண்ணாளர்க்கருநிதியந்தோன்றுவபோ
னஞ்சலகைமாற்றியதினுனுவர்போல் - வெஞ்சாப
விடுபோற்றேன்றுமருண்மேலிட்டால்விப்பிரட்டா
மோடையின்மண்டுகமோப்போர்க்கு. (உஅ)

அவரவரைப்போலிருப்பர்தாமவராகார்போ
லிவரவர்க்கொப்பில்லையெனினு - முவமைசொலின்
வேசிபணம்வெய்யோன்விண்வெளிவிசிறி
யாசியர்போலென்கினுமாவர். (உகூ)

தண்டுகுடையாளசாய்ச்சாதூசங்கப்போசசாய்த்
தொண்டர்குழாம்போற்றச்சுகித்தாலு - முண்டுசுத்தர்
போகத்தாசோசுடர்போற்போய்ப்போகமெய்ப்பெருக்காய்ச்
சாகப்போவார்கடன்றீர்த்தல். (௩0)

பெருநோவுக்கேயென்னப்பெற்றவுடற்போக
நசகேழுமூட்டுமிதுநாஞ்செத் - துருவத்தத்
தாமல்லாற்போகிப்பதல்லவதுவன்பர்பதங்
காவலாட்கைத்தளைபோற்காண். (௩க)

சுகிக்கில்லை துக்கஞ்சுடுகாடுசொர்க்க
மகத்துக்குஞ்சொர்க்கநசகாய்ந்தார் - சுகிப்பதுவு
மத்துவிதானந்தர்க்காகாசமற்றது
பத்திசெய்வார்க்கேற்கும்பயன். (௩உ)

அரிபிசமரிந்திசர்களாதிகளார்தானச்
சரிவிசத்தனின்பத்தைச்சாற்றிற் - பசமசிவன்
றனேசரிமீட்டுச்சாற்றுகிற்றன்றன்சரிவே
றுணைவேதமறியா. (௩௩)

சாலோகமாதிதருஞ்சைவசித்தாந்தி
பாலேகம்பார்க்கப்பணியுமவன் - மேலே
யுருகித்திருவுளத்துக்குற்றபணிசெய்வார்
பெருமைக்கேதுண்டோபிற. (௩௪)

காலமுடன்றேசந்திக்குக்கருமமுடற்
கோலஞ்சமயக்குறிப்பறிதல் - சீலந்
தலையோடுபோனவுயிர்தான்போலத்தன்னை
டிலையாஞ்சிவனேயிவன். (௩௫)

சாவேபெருநோன்பாய்ச்சந்தற்றசத்தியர்க்குத்
தேவாசங்காலந்தியானமறம் - பாவம்

விதிவிருத்தம்பேசுகைக்குவேதாகமங்க
ளதிசயிக்குமேலுரைப்பாரார். (௩௬)
மோனிகளைப்பார்த்திமையாமோகமும்வெண்டிங்கள்
மேனியழகெழுதாமேற்பத்தி - யான
பதுமாதனன்கண்ணும்பாலும்போற்றுனு
வெதிராகுஞ்சொப்பனத்திலும். (௩௭)
உருகுபரமசுகவுல்லாசநோக்குந்
திருமுகமும்புன்முறுவற்றேசுந் - திருநீறுந்
துற்பாவமாணடசரீரத்திலோர்சாந்து
மற்றேதெவருமனமுகாம். (௩௮)
வாடன்மணம்போலவருந்தாவபிராக்யத்
தோடுமெலிந்தவுடம்பட்டனே - கூடார்
திருவிடயானந்தசுகநீங்காதநோக்குந்
திருமுகமுமென்னைவிடாது. (௩௯)
தத்துவத்தின்போர்வைசரிந்ததிகம்பரிப்பே
ரத்துவிதியேகாந்தியானந்தி - சுத்தன்
றுரியனவதூதன்றுறவிசிவயோகி
திருவாலியென்விரத்தனென். (௪0)
அடங்கத்துறந்தார்க்குமாசையறப்பாவித்
தொடும்பக்குவந்தெரியாதோகோ - மடந்தேடிப்
பிச்சையாய்மூலையிற்பெண்பேச்சாய்வரினடக்கைக்
கிச்சையாய்க்கைக்கெதிர்நீட்டும். (௪௧)
கரையடுக்கவந்தாற்றிரையலைக்குங்கப்பல்
பொருளடுத்தாற்றேன்றும்பொய்ப்போதம் - விருதினவன்
வெற்றிக்குதிகுதித்தோன்போல்வேண்டும்விட்டதுபின்
பற்றுமதிற்சிக்கெனநிற்பாய். (௪௨)

எட்டாவது அருளவத்தைத்தன்மை முற்றிற்று.

ஆக திருவெண்பா - ௨௩௧.

## ஒன்பதாவது.

# வாதவனுமாண்டார் தன்மை.

ஞானமில்லாதவைராக்கிநன்றல்ல
கானவர்க்குநோயினர்க்குங்கள்ளர்க்கு-மான்துவெ
வென்னிலைக்கேநின்றுமெலனெவ்விடயத்தேய்ந்தாலென்
றன்னிழப்பேயின்பாந்தலம். (௧)

எல்லாச்சமயங்களுந்துநிற்குமில்லறத்தி
னில்லாமனீத்தாரென்னீத்தாலென் - புல்லறிவைத்
தீரத்தெளிந்துசிவத்தோடும்பற்றற்று
ராகிற்பிறப்பறுக்கலாம். (௨)

மனையிழக்கிலோமனதுமாறுதுமாய்த்த
நனையிழக்கிலோசிவனைச்சார்ந்தங் - கருபவிக்கை
போகாததுபோகிற்பூரணமாம்பூரணந்தா
னாகாதிருப்பதெவர்க்காம். (௩)

மாயாபோகத்தரசாய்வாழ்ந்தாலுமாமணிபோற்
றோயாதவரேதுறந்தோர்க - டோய்வாரேற்
சேரும்விதைபோலத்தீர்ந்தவிடத்தேதிரும்பும்
வேறொன்றதுவேவினை. (௪)

ஒருகுடைக்கீழ்வாழுலகத்தோர்க்குறும்பூருண்டோ
வருணிழற்கீழ்வாழ்வாரறிவு - கருவிகளிற்
போனாலேன்சேற்றுத்தூள்போலோபருந்துநிழற்
போனாற்போற்றோயாமற்போம். (௫)

நெய்யுண்டநாவென்னநீரினிழலென்ன
மையுண்டகண்போன்மனைவாழ்வார் - துய்ய
வருளால்விலையேறுமாணிக்கமெல்லாப்
பொருள்போலவல்லாப்பொருள். (சு)

துடைகட்டலொன்றே துயிற்கும்விழிக்கும்
படிகந்திருண்மணிக்கேன்பற்று - மடிபார்த்துக்
கூடப்போங்கள்ளனைப்போற்கூடாக்குடும்பக்கூத்
தாடிக்கேன்மேற்பிறப்புண்டாம். (எ)

கொடும்போகழல்காற்றுந்தூளம்போற்றிருட்டு
விடும்போதுமங்மனைவிட்டு - நடந்தாலு
மாகாயநீங்காமலாடியதுபோலடங்கு
மேகாந்திக்கெங்கிருந்தாலென். (அ)

சுந்தரனூர்சேரர்கோன்சோழர்குறுமன்னர்
மைந்தருடறம்முடலைவாட்டினர்க - ளந்தமிலாப்
பத்தரொடுஞானவயிராக்கியர்பலர்க்கு
மொத்ததுசார்போதவொழிவு. (கூ)

ஒன்பதாவதுவாதனைமாண்டார்தன்மை முற்றிற்று.
ஆக திருவெண்பா - உசo.

---

## பத்தாவது.

# நிலையியல்பு.

---

அறியார்வழிகேட்டறிந்துநடக்க
வறிவாரறிவென்றறியார் - மறையாக்
குடையிருக்கத்தாமேகுநித்துங்கடந்து
மடர்மழைக்கேவாறவர்போல்வார். (க)

செத்துப்பிறவாமற்றேடித்திரிகையிலே
செத்துப்பிறந்துதிரிவீரே - சுத்த
விருட்கேவலசகலம்போகவெதிரிட்ட
வருட்போதராய்த்திரியாமல். (உ)

சகலமுங்கேவலமுந்தாக்கறுப்பான்றுனே
பகல்விளக்கோடுச்சிப்படிகந் - *தகவைத்தா
ழூட்டியுறக்குவதுநாமேநம்முட்கலப்பு
நாட்டமொழியென்றருளினன். (ங)

சாக்கிரந்திற்போதச்சலனையெல்லாஞ்சொப்பனம்போ
லாக்குமருட்போதராகுவோர் - நீக்கும்
பரயோகர்சுத்தர்பரமசுகானந்தர்
துரியகதியின்புகடந்தோர். (ச)

தத்துவம்போய்க்கேவலம்போய்த்தான்போயருள்கழன்று
சுத்தபரையாய்த்தன்சுதந்திரம்போய்ச் - சத்தி
யொழிவிலேபோதம்போயொன்றாகவொன்றி
னழிவிலேயின்பவதீதம். (ரு)

போதப்புரவிபுருடனதிலேந்து
விதிப்பவனிவிறிசாகும் - போதப்
புரவியருளேறினற்போக்குவரவற்ற
பரமசுகமாங்காணப்பா. (சு)

அறிந்தழுந்தியாராய்ந்தகம்புறமாய்த்தேடி
மறந்தவனாய்த்தானாய்மயங்கிப் - பிறிந்து
சுகதுக்கமாய்ப்பதறிச்சுட்டுத்தொழில்போய்ப்
பகைகெட்டதுதுறவப்பா. (எ)

நடந்ததெல்லாநீயேநடப்பழியநின்ற
விடஞ்சிவநீயென்றிருக்கவெண்ணி - லடங்கின்

* தகவைத்தாழ்என்றும்பாடம்.

மயக்கிமலமழுத்துமாயையிதுவாரா
வயிர்ப்பருளாலாஞ்சிவயோகம். (அ)

அருளும்பரையுமருக்கன்மதிபோன்ற
விரவுபகலற்றவிடத்தே - பரமநிலை
சந்திக்கழற்றியிலேசச்சிதாநந்தமய
சுத்தநிலைநியற்றது. (கூ)

தாமருந்தல்போலத்தபைச்சிவனுக்கூணுக்கித்
தாமருளாலுண்டுபரைதாமாகித் - தாமழிய
வஞ்செழுத்தாலர்ச்சித்தடியார்க்கடிமைசெயிற்
பஞ்சமலக்கொத்தறுமப்பா. (க0)

கருவியுதிப்பிற்சகலகேவலத்தைக்காட்டி
யருளுதிப்புமங்கதுபோலாக்கி - யிரவுபகற்
றூக்காதசுத்தத்தலத்துநாம்வைக்கநீ
யாக்காதெமக்குப்பரம். (கக)

கருப்பநிலத்தைக்காண்டுதிரிவார்க்குச்
சருக்கரையேவாயிற்சனித்தாங் - கிருந்திவிடு
மெந்தலைமையென்பிராவீனர்வாக்கென்னவே
தந்தலைமைமாண்டதலம். (கஉ)

கண்மணியினுகாயநிழல்கலந்தாற்போல்
உண்மையைநீயுன்டென்றெனையுணர்த்தித் - துன்னெனவே
பார்த்திருந்தசித்திரம்போற்பார்த்தானைநாம்பாவித்
தோத்திரஞ்செய்யாப்பிறவாச்சொல். (கந)

பத்தாவது நிலையியல்பு முற்றிற்று.
ஆ திருவெண்பா-உருரு.

---

ஒழிவிலொடுக்கமூலம்முற்றுப்பெற்றது.

---